25th March 1958]

சீனியர் பேஸிக் பள்ளிகளில் இடம் பெறுவார்களா என்பது பற்றி இப்பொழுது போஸ்ட் பேஸிக் பள்ளிகளில் எந்த அளவுக்கு படிப்பின் தரம் இருக்கிறது என்பதை நிர்ணயிக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு அவர்களும் தங்களுடைய அறிக்கையை சமர்ப்பித்து இருக்கிறார்கள். அதை பரிசீலனை செய்த பிறகு அந்த படிப்பின் தரம் எஸ்.எஸ்.எல்.ஸி. படிப்பின் தரத்திற்கு உயர்ந்து இருக்குமானால் சீனியர் பேஸிக் பள்ளிகளில் எடுத்துக் கொள்வதற்கு ஆட்சேபனை கிடையாது.

SRI M. P. PERIASAMI : ஓர் ஆசிரியர் பள்ளிகளுக்காக மோகனூரில் 200 பேர்களுக்கு பயிற்சி கொடுக்கப்படுகிறது. ஆனால் அது போஸ்ட் பேஸிக் டிரெயினிங் அல்ல. அந்த இடத்தில் பயிற்சி கொடுக்கும் ஆசிரியர்களுக்கும் "போஸ்ட் பேஸிக்" டிரெயினிங் கொடுப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லா டிரெயினிங் ஸ்கூல்களையும் "பேஸிக் டிரெயினிங்" ஸ்கூல்களாக மாற்ற வேண்டும் என்பது தான் சர்க்காரின் திட்டம். ஒவ்வொரு வருஷமும் 15 அல்லது 16 ஸ்கூல்களை மாற்றிக்கொண்டு வருகின்றோம். இன்னும் சில வருஷங்களில் எல்லா பயிற்சி நிலையங்களும் பேஸிக் பயிற்சி நிலையங்களாக மாறிவிடும்.

SRI T. S. RAMASWAMY PILLAI : "போஸ்ட் பேஸிக்" டிரெயினிங் முடித்தவர்களுக்கு, "பிரி யூனிவர்சிடி கோர்ஸ்"ல் அனுமதிக்கப்படுகிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்னும் இல்லை.

*Stamp vendors.*

* 403 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any rule preventing the appointment of village headmen as stamp vendors; and

(b) if so, whether any exemption from this rule is proposed to be granted to them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No, Sir.

(b) Does not arise.

*State Taxes.*

* 404 Q.—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Finance be pleased to state the rate of State taxes *per capita* in the State?

THE HON. SRI C. SUBRAMANIAM :

| | Budget Estimate. 1957–58. RS. | Revised Estimate. 1957–58. RS. |
|---|---|---|
| Incidence of principal heads of revenue *per capita* per annum is .. .. .. .. | 12·6 | 13·7 |
| If the share of Central taxes and revenue from Forests is excluded, the incidence *per capita* .. .. .. .. .. .. | 9·9 | 10·4 |

SRI S. LAZAR : How does it compare with the other States?

THE HON. SRI C. SUBRAMANIAM : I hope to give some information about it during the course of the Budget debate.

[25th March 1958

SRI K. VINAYAKAM : Do not the Government feel that the incidence of taxation per head in our State is a bit slightly higher?

MR. SPEAKER : Higher than what?

THE HON. SRI C. SUBRAMANIAM : We can only speak relatively with reference to comparable figures. Therefore when the hon. Member says 'higher', I do not know 'higher' with reference to what?

SRI S. NAGARAJA MONIGAR : மற்ற ராஜ்யங்களைவிட நம் ராஜ்யத்தில் வரிகள் அதிகமாக இருப்பதனுல், நம் ராஜ்யத்தில் வாழ்க்கைத் தரமும் மற்ற ராஜ்யங்களைவிட அதிகமாக இருக்கிறது என்று கொள்ள முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதில் எந்த விதமான முடிவுக்கும் வர முடியாது. ஆகையினுல் தான் இப்போது ஒவ்வொரு ராஜ்யத்திலும் சராசரி வருமானம் என்ன என்பதை நிர்ணயிக்க இப்போது ஏற்பாடு நடந்து கொண்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI : உற்பத்தி பெருகிக் கொண்டு வரும்போது வரிகள் குறைந்து கொண்டு தானே வர வேண்டும். சர்க்கார் இனிமேலாவது வரிகளைக் குறைப்பதற்கு நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கத்தினர் அவர்களின் பொருளாதாரத் தத்துவமோ அல்லது நிதி தத்துவமோ எனக்குப் புரியவில்லை.

SRI T. KARIA GOUNDER : உற்பத்தி பெருகுவதாக அங்கத்தினர் அவர்கள் சொன்னரே, அது என்ன என்பது பற்றி கனம் அமைச்சர் அவர்கள் விளக்கம் சொல்வார்களா ?

MR. SPEAKER : இதைப்பற்றி கனம் அங்கத்தினரை கேட்க வேண்டுமே தவிர கனம் அமைச்சரை கேட்க முடியாது.

*Assignment of poramboke lands to Harijans.*

*405 *Q*.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(i) the extent of poramboke lands assigned to Harijans in 1955-56 and 1956-57 in the South Arcot district;

(ii) the Villupuram taluk; and

(iii) the Kalpathi village of Villupuram taluk?

THE HON. SRI M. A. MANICKAVELU :

| 1955–56 | 1956–57 |
|---|---|
| ACS. | ACS. |
| (i) Nil. | 127.08. |
| (ii) Nil. | Nil. |
| (iii) Nil. | Nil. |

SRI A. GOVINDASAMY : 1955–56-ம் வருடத்தில் ஏன் ஆதிதிராவிட மக்களுக்கு புறம்போக்கு நிலங்கள் ஒதுக்கப்படவில்லை என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : ஒதுக்குவதில் கொஞ்சம் காலதாமதம் ஏற்பட்டிருக்கலாம். அது 1956–57-ல் வந்து விட்டது.